these clerks. Will the Government look into the matter and give some special grant to the managements for enhancing the scales of pay of these clerks?

THE HON. SRI C. SUBRAMANIAM : This question relates to clerical staff of the Education Department in Kanyakumari district. If the hon. Member is interested in the other question he has put, he may give notice of a separate question.

*Presidents of Panchayat Union Councils (Election)*

* 2308. *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவர் தேர்தல்களில் கடும் போட்டியும், பணச் செலவும், மக்களிடையே பிளவு மனப்பான்மையும் ஏற்படுவது சர்க்காரின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டதா ?

(இ) அப்படியாயின், 1958-ம் வருஷ பஞ்சாயத்து சட்டத்தைத் திருத்தி தலைவர் தேர்தலை மாற்றியமைக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) No written representation has been received by the Government.

(இ) No, Sir.

SRI S. M. ANNAMALAI : எழுத்துமூலம் புகார்கள் இல்லாவிட்டாலும், இப்பொழுது பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கு நடைபெறும் தேர்தல்களிலே பலவிதத் தவறான முறைகள் கையாளப்படுகின்றன என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்களே சொல்லியிருப்பதாகக் கேள்விப்பட்டேன். பஞ்சாயத்து போர்டு தலைவர்களே பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மனைத் தேர்ந்தெடுக்கின்ற முறை இருப்பதன் காரணமாக பலவிதத் தவறுகள் ஏற்படுகின்றன. தேர்தலுக்கு 10 அல்லது 15 நாட்களுக்கு முன்பே வோட்டர்களைத் தூக்கிச் சென்று விடுகிறார்கள். வோட்டுப் போடுவதற்கு அவர்கள் பணம் பெறுகிறார்கள். அதற்காக பல ஆயிரக்கணக்கான பணம் செலவாகிறது என்பதையும் நாம் பார்க்கிறோம். ஆகவே, தயவுசெய்து இந்த 1958-ம் வருஷ சட்டத்தைத் திருத்தி இந்த பஞ்சாயத்து போர்டு தலைவர்களால் தேர்ந்தெடுக்கும் முறையை மாற்றி, மக்களாலே தேர்ந்தெடுப்பதற்கு ஏற்பாடு செய்ய முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுவரையிலும் 358 பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்குத் தேர்தல் நடந்திருக்கிறது. 66-ல் போட்டியில்லாமலேயே தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். ஏறத்தாழ 240 தேர்தல்களில் " ஸ்டிரெயிட் காண்டெஸ்ட் " அடிப்படையில், அதாவது இரு அபேட்சர்களுக்குள்ளே தேர்தல் நடந்திருக்கிறது. சில தேர்தல்களிலே தவறுதல்கள் நடந்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. பலவிதமான

முறைகள் கையாளப்பட்டிருக்கின்றன என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். மக்களால் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய பஞ்சாயத்துத் தலைவர்கள் பொறுப்பு உணர்ச்சியுடன் நியாயமாகவும், கண்ணியமாகவும் நடந்துகொள்ளுவதற்கு முன் வந்தால் ஜன நாயகம் நன்ருக நடைபெறும். பஞ்சாயத்தாக இருந்தாலும் சரி, மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் சட்டசபையாக இருந்தாலும் சரி, மற்றவர்களுக்கு வழிகாட்டியாக நேர்மையாகவும், நாணயமாகவும் நடப்பது மிகவும் அவசியம் என்பதை இந்த நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டுகின்றன.

SRI K. VINAYAKAM : Sir, in view of the complaints of lifting of Presidents away from their constituencies like lifting of cattle, etc., is it not a valid conclusion to be drawn by the Government that it is too early to introduce these democratic measures for which our people are not fit enough to receive unless the national character of the people improves.

THE HON. SRI C. SUBRAMANIAM : Some people advance the same argument even with reference to this Assembly. That does not mean that democracy is not valid. As far as we are concerned, if the villagers are good enough to elect the Members to represent them in the Assembly they are good enough to elect their own representatives in the panchayats. In these things simply because certain irregularities are committed in certain areas, we need not feel despendent that our people are not ready for democratic institutions.

SRI S. M. ANNAMALAI : ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன்களிலும் இரண்டு மூன்று கட்சிகள் இருந்து கொண்டிருப்பதால் அங்கு வேலைகள் நடைபெருமல் தடைபடுகின்றனவே, அதைக் குறித்து சர்க்கார் ஏதாவது பரிசிலனை செய்தார்களா? அதற்கு என்ன நடவடிக்கை சர்க்கார் எடுத்துக்கொண்டார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தேர்தலைப் பொறுத்த வரையில் பஞ்சாயத்துக்களில் போட்டி இல்லாமல் தேர்தல் நடைபெற வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்து. போட்டி இல்லாமல் ஒரு மனதாக தேர்ந்தெடுப்பதுதான் நல்லது. அப்படி போட்டி இருந்து தேர்தல் நடந்த பிறகு, போட்டி மனப்பான்மை இல்லாமல் ஒற்றுமையாக இருந்து பஞ்சாயத்துக்களை நடத்துவது தான் நல்லது. அப்பொழுதுதான் அது வெற்றிகரமாக நடைபெறும். கட்சி மனப்பான்மை தொடர்ந்து தேர்தல் நடந்த பிறகு கூட ஒற்றுமையாக இல்லாமல் பதவிக்கு வந்தவர்களை நடந்த பிறகு கட்சி மனப்பான்மை இருப்பது நல்லது அல்ல. ஆனல் இப்பொழுது எப்படி இருக்கிறது என்ருல் தேர்தல் நடந்த பிறகுகூட ஒற்றுமையாக இல்லாமல் பதவிக்கு வந்தவர்களை எப்படியாவது துரத்திவிட வேண்டும் என்ற மனப்பான்மையில் வேலை செய்வதாகத்தான் இருக்கிறது. பஞ்சாயத்துக்களில் கட்சி மனப்பான்மை இருந்தால், தலைவர்கள்தான் அதை போக்குவதற்கு வழி காணவேண்டும். அவர்களை தலைவர்கள்தான் திருத்தி அமைக்கவேண்டும் என்பதற்கு வழி காண

[13th December 1961

வேண்டும். இப்படி கட்சி மனப்பான்மை வளர்ந்துகொண்டே போனுல்தான் வேலைகள் தடைபட்டுப் போகிறது. தலைவர்கள் அதற்கு வழிகாணவில்லையானுல் பொதுமக்கள்தான் அவர்களுக்கு பாடம் கற்பிக்கவேண்டும் என்று நான் எண்ணுகிறேன்.

SRI S. M. ANNAMALAI : பஞ்சாயத்து தேர்தல்களில் அரசியல் கட்சிகள் ஈடுபடக்கூடாது என்ற முறையை அனுசரிக்க சர்க்கார் முன் வருவார்களா? அதற்கு வேண்டிய வழிவகைகளை சர்க்கார் காண்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கட்சி மனப்பான்மை இருக்கக்கூடாது என்ற அடிப்படையில்தான் நான் முன்னதாக பதில் சொன்னேன். அதற்குத்தான் கட்சித் தலைவர்கள் தலை யிட்டு இதற்கு ஒரு முடிவு கட்டவேண்டும் என்றும் சொன்னேன். அவர்கள் அதற்கு வழி தேடாவிட்டால் பொது ஜனங்களே அவர் களுக்கு பாடம் கற்பிக்கவேண்டும் என்றும் சொன்னேன். ஆனுல் பெரிய இடங்களில் தேர்தல் நடக்கும்போது அப்படி நடக்க வில்லை. ஏதோ எப்படியாவது ஜெயித்து வந்துவிடவேண்டும் என்ற மனப்பான்மையில் காரியங்கள் எல்லாம் நடைபெற்று வருகின்றன. பெரிய இடங்களிலேயே அப்படி நடக்கும்போது சிறிய இடங்களாகிய பஞ்சாயத்து தேர்தல்களில் கேட்பானேன். அதற்கு பொது ஜனங்கள்தான் பாடம் கற்பிக்கவேண்டும். அவர் களால்தான் முடியும். அப்படி ஜெயித்து வந்துவிட்டு, ஜெயித்து விட்டோம் என்றுகூட பெருமைப்படக்கூடிய அளவில் நடை பெற்றுவருகிறது. இது இருக்கவே கூடாது.

SRI T. K. SUBBIAH : சில அரசியல் தலைவர்கள் பணத்தை செலவழித்துவிட்டு வந்து, கேட்டதைக் கொடுத்தோம், விரும்பிய தைப் பெற்றோம், ஜெயித்து விட்டோம் என்று பெருமைப் பட்டுக் கொள்கிறுர்களே, ஜனங்களிடத்தில் வந்து சந்தோஷப் படுகிறுர்களே, தலைவர்கள் அப்படிப் பேசுவது சரியா, முறையா என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தக் கருத்தைத்தான் நான் முன்னமே விரிவாகச் சொன்னேன்.

SRI K. ANBAZHAGAN : உள்ளாட்சி மன்றத் தேர்தல்களில் ஏராளமான பணத்தைச் செலவுசெய்து வெற்றி பெறுவது என்ற முறையைத் தோற்றுவித்த ஆளும் கட்சியினர் அந்த முறையை மாற்றுவதற்கு ஏதாவது வழி காண்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை தோற்றுவித்தது ஆளும் கட்சி அல்ல. ஆளும் கட்சி என்று சொல்ல முடியாது. அப்படி பணத்தை செலவு செய்து வெற்றி பெறக்கூடியவர்களை திருத்தினுல்தான் நாடு முன்னுக்கு வர முடியும் (ஆரவாரம்).

SRI K. VINAYAKAM : Sir, is the Hon. Minister aware of the fact that this kind of cantankerous disease of demoralizing the members of the local bodies has crept in even into the major local administration, viz., the Madras City Corporation, which has been evidenced by the recent Mayoral election?

13th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : We are dealing with Panchayat Unions. We do not go into the Corporation, the affairs of which have already become a sufficient public scandal.

*Fishermen's villages (water-supply)*

* 2310 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the steps taken by the Government to provide drinking water to fishermen's villages of Vavathurai Cape, Manakudy and Kovalam in Kanyakumari district; and

(*b*) the reasons for the delay in carrying out the extension of pipe line to fishermen's villages in Cape?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The steps taken are as follows :—

*Vavathurai and Cape.*—The work of providing water facilities to Cape under the National Water-supply Scheme has been completed, except for pipe connections to 25 public fountains, which work is in progress and will be completed by this year.

*Manakudy.*—In connection with a proposal for protected water supply to Manakudy, a new well has been sunk at Manavalapuram and the preliminary investigation for the scheme has also been completed. The scheme has not been taken up pending collection of contribution from the public.

*Kovalam.*—A well was proposed originally for this village. Subsequently the construction of an overhead tank has been proposed. The estimate for the work has also been prepared and the selection of the nominee by the villagers is pending.

(*b*) It has been reported that there has been no delay in carrying out the proposals.

*Schools in Valliyur Panchayat*

* 2312 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

Why the teachers of aided schools in the Valliyur Panchayat Union Council area have not been paid their salaries and the two quarterly advance grants for midday meals to school children?

THE HON. SRI C. SUBRAMANIAM : A report has been called for from the Director of Public Instruction and is awaited.

SRI V. K. RAMASWAMI MUDALIYAR : Question No. 2311 has not been answered. May I know the reason, Sir?

DEPUTY SPEAKER : The hon. Member, Sri V. K. Ramaswami Mudaliar, came late. Before he came, I announced that the questions relating to the Hon. Minister for Industries would be postponed.